SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, in the recent Agricultural Ministers' Conference held at New Delhi it seems that the Union Minister said that he would have to export sugar to earn more foreign exchange in order to get more fertilizers. Is it with a view to augmenting the supply to the Tamil Nad?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. The Union Minister proposes to export about five lakhs tons of sugar and he has settled with the Finance Ministry that all the foreign exchange earned through the export of agricultural commodities must be exclusively reserved for the import of fertilizers from other countries. The Union Minister pointed out that during the last year oil-cakes were exported to the extent of 14 crores of rupees, but subsequently that amount was not allotted for the import of fertilizers but that the Finance Ministry had now agreed to let the entire amount for the import of chemical fertilizers.

SRI P. G. MANICKAM : ஸார், இவ்வாறு வருஷந்தோறும் நமக்கு ஒதுக்கப்படும் அளவானது மிகக் குறைவாக இருப்பதால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது இரசாயன உரத் தொழிற்சாலை ஒன்றை இங்கு ஏற்படுத்த நமது சென்னை சர்க்கார் இந்திய சர்க்காரை வற்புறுத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் புதிய உரத் தொழிற்சாலை நிறுவப்படும். ஆனால் நம்முடைய தேவை முழுவதுக்கும் அந்தத் தொழிற்சாலையிலிருந்து எதிர்பார்க்க முடியாது.

SRI A. VEDARATHNAM : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் அளித்த பதிலிலிருந்து இங்குள்ள பிண்ணாக்கை ஏற்றுமதி செய்து அதற்குப் பதிலாக "பர்டிலைசரை" இறக்குமதி செய்வதாகச் சொன்னார். பிண்ணாக்கே நல்ல உரம். கால் நடைகளுக்கும் அது பயன்படுகிறது. அதை வெளிநாடுகளுக்கு அனுப்புவதனால் இங்கு கால்நடைகளுக்குத் தீனி குறைந்த விலையில் கிடைக்க முடியாது. ஆகவே, இதன் ஏற்றுமதியைத் தடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பிண்ணாக்கு பூராவையும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவில்லை. ஓரளவு ஏற்றுமதி செய்வதன் மூலம் நமக்கு அந்நியநாட்டுச் செலாவணி 14 கோடி ரூபாய் கிடைக்கிறது. அந்தப் 14 கோடி ரூபாயும் இரசாயன உரங்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தப்படுகிறது.

### *Madras Pay Commission's recommendations*

* 419 *Q.*—SRI N. K. PALANISAMI :<br>
SRI A. A. RASHEED :<br>
SRI N. R. THIAGARAJAN :<br>
} Will the Hon. the Minister for Finance be pleased to state whether any financial assistance has been promised by the Centre to implement the recommendations of the Madras Pay Commission?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

(Sri N. K. Palanisami rose.)

MR. SPEAKER : What is the hon. Member going to ask when the Hon. Minister says 'no' to the question originally put?

5th September 1960]

**Sri N. K. PALANISAMI** : ஏற்கனவே ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்பட்ட 12 ரூபாயை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். நான்-கெஜடெட் ஆபீஸர்களுக்குக் கொடுக்கப்பட்ட 5 ரூபாயில் பாதியை மத்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதேபோல் இந்தத் தொகையிலும் பாதியை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதற்காக இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இப்போது அதைப் பற்றி மத்திய சர்க்காருக்கு எழுதியிருக்கிறோம். இன்னும் அவர்கள் முடிவு செய்யவில்லை.

**Sri N. R. THIAGARAJAN** : இப்படி மத்திய சர்க்காரிலிருந்து ஒருவிதமான உதவியும் இல்லாதபோது இப்போது கொடுக்கப்பட்டிருக்கக் கூடிய சம்பள உயர்வினால் ஏற்பட்டிருக்கக் கூடிய ஏழு கோடி ரூபாய் அதிகச் செலவை எப்படி சரிகட்டப் போகிறார்கள் ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கேள்வி நேரத்தில் இதைப் பற்றி எவ்வாறு சொல்ல முடியும் என்று தெரியவில்லை. இருந்தாலும் இப்போது மத்திய சர்க்காருக்கு, இதற்கான நிதி உதவிடப் சென்னை சர்க்காருக்கு அளிக்கவேண்டுமென்று எழுதியிருக்கிறோம். இன்னும் பதில் வரவில்லை.

**Sri A. A. RASHEED** : Sir, has the Government approached the Union Government for the entire amount as a grant or as a loan and grant?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : We have asked for assistance. I cannot disclose whether it would be in the form of grant or loan

**Sri M. P. SUBRAMANIAM** : டில்லி அரசாங்கம் இரண்டாவது சம்பளக் கமிஷன் நியமித்தபோது, " மத்திய அரசாங்க சிப்பந்திகளுடைய பிரச்னையைக் கவனிக்கும் நேரத்தில் சென்னை மாநில அரசாங்க சிப்பந்திகளுடைய நிலைமையையும் கவனித்துத்தான் அவர்களுக்குப் பரிகாரம் கொடுக்கவேண்டும் " என்று நம்முடைய அரசாங்கம் சொல்லியிருப்பதும், அப்படி உயர்த்தினால் நமக்கு உதவி செய்ய வேண்டுமென்று " ரெப்ரஸெண்டேஷன் " செய்திருப்பதும் உண்மை அல்லவா ? அப்படியானால், அவர்கள் உதவி செய்யக் கடமைப்பட்டவர்கள் அல்லவா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதைப்பற்றி எழுதியிருக்கிறோம் என்று சொன்னேன். இன்னும் முடிவான பதில் வரவில்லை.

*Transport employees*

* 420 *Q.*—Sri T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the scales of pay of drivers, conductors, checking inspectors of the transferred persons in the Kanyakumari district Transport Branch and those of the rest of the Madras Transport Department;

(*b*) the number of the transferred Transport Department staff in Kanyakumari district, who are pensionable staff;